[15th March 1961

*New Sugar Factories*

* 851 *Q.*—SRI A. VEDARATHNAM :
SRI V. K. KOTHANDARAMAN : } கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் புதிதாக இன்னும் எத்தனை சர்க்கரை ஆலைகள் அமைக்கப்படும்? எங்கெங்கே?

(இ) அவை ஒவ்வொன்றின் உற்பத்தி அளவென்ன?

(உ) இவை யாரால் எவ்வளவு மூலதனத்துடன் துவங்கும்?

(எ) இவற்றிக்கு நம் மாநில, மத்திய அரசாங்க உதவி என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Licences have been issued by the Government of India for the setting up of eight new sugar factories in the State. Of these, three are for factories in the co-operative sector which are to be located at Mohanur in Salem district, Kallakurichi in South Arcot district and Samayanallur in Madurai district. The remaining five factories are to be in the private sector and will be located at Sirumayangudi village in Tiruchirappalli district, Pennadam in South Arcot district, Kumarapuram in Thanjavur district, Mundiambakkam in South Arcot district and Kavundapadi in Coimbatore district.

(*b*) They will each have a sugarcane crushing capacity of about 1,000 tons per day.

(*c*) The particulars relating to the co-operative sugar factories are given below—

(1) Salem Co-operative Sugar Factory by Sri K. S. Subramania Gounder, M.L.A., Salem, with a share capital of Rs. 20 lakhs to be raised from members;

(2) Kallakurichi Co-operative Sugar Factory by Sri N. Narayanaswamy Naidu of Kallakurichi with a share capital of Rs. 20 lakhs to be raised from members, and

(3) National Co-operative Sugar Factory, Samayanallur by Sri W.P.A.R. Chandrasekaran, M.L.A. of Pattiveeranpatti with a share capital of Rs. 20 lakhs to be raised from members. The particulars regarding sugar factories in the private sector cannot be furnished.

(*d*) Each sugar factory in the co-operative sector will get a sum of Rs. 20 lakhs as loan assistance from the Government initially to be recouped from the Government of India later. Assistance to Private Sector is given by the Madras Industrial Investment Corporation.

SRI A. VEDARATHNAM : ஸார், இந்த 8 சர்க்கரை ஆலைகளும் வேலைசெய்யத் துவங்கினால் சுமார் 80,000 டன் கரும்பு உற்பத்தி செய்யும் அளவுக்கு நிலம் தேவைப்படும். இப்போது அவ்வளவு

நிலமும் உணவு உற்பத்தியில் இருந்து வருகிறது. அதை மாற்றி கரும்பு உற்பத்தி செய்தால் உணவு உற்பத்தியில் தடை ஏற்படாதா? இதை சர்க்கார் ஆலோசித்தார்களா? அப்படியானால் அதற்கு என்ன பரிகாரம் தேட முன் வரும்?

THE HON. SRI R. VENKATARAMAN: ஒரு ஷுகர் பாக்டரியை வைக்கும் முன்பு அதற்கு ஏறக்குறைய 4,000 ஏக்கர் நிலம் வேண்டியிருக்கிறது. இருக்கிறது என்று சொன்னால் அதைப் பற்றி பரிசீலனை செய்ய மத்திய சர்க்காரிலிருந்து ஷுகர் எக்ஸ்பெர்ட் என்று ஒருவர் வருகிறார். இதையெல்லாம் பார்த்துத்தான் கொடுக்கப்படுகிறது. மக்களிடையே ஒரு தவறான பீதி இருப்பதைத் தவிர்க்க வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன். நிலம் விஸ்தாரமாக இருந்தால்தான் அதிக உற்பத்தி செய்ய முடியுமென்பதல்ல—இன்டென்ஸிவ் கல்ட்டிவேஷன் மூலமாகக் கூட அதிக உற்பத்தி செய்ய முடியும்.

SRI V. K. KOTHANDARAMAN: கரும்பு சாகுபடி அதிகப்படியாக இருக்கக்கூடிய சாத்தனூர் தண்ணீர் பாயக்கூடிய திருவண்ணாமலையில் ஒரு கூட்டுறவு சர்க்கரை ஆலை ஆரம்பிக்க வேண்டுமென்று 5 லட்சம் ரூபாய்க்கு ஷேர்கள் சேர்க்கப்பட்டிருப்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா? அங்கே ஒரு சர்க்கரை ஆலையை ஏற்படுத்த முயற்சி செய்யப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: திருவண்ணாமலை மாத்திரமல்ல, எத்தனையோ ஊர்களில் தயாராக இருக்கிறார்கள். ஆனால் நமக்கு எவ்வளவு கிடைக்குமோ அவ்வளவுக்குத்தான் ஏற்படுத்த முடியும்.

SRI N. R. THIAGARAJAN: நமது ராஜ்யத்திற்கு எவ்வளவு சர்க்கரை தேவை இருக்கிறது? எவ்வளவு உற்பத்தி செய்யப் போகிறார்கள்? மிச்சம் உள்ளதை என்ன செய்யலாம் என்று நினைக்கிறார்கள்? மத்திய அமைச்சர் ஒருவர் நமது நாட்டிலிருந்து சர்க்கரையை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதில் கோடிக்கணக்காக நஷ்டம் ஏற்படுகிறது என்று தெரிவித்திருக்கிறாரே? நமது ராஜ்யத்திற்கு ஏற்படக்கூடிய நஷ்டத்தை எப்படி சரிக்கட்டப்போகிறார்கள்?

THE HON. SRI R. VENKATARAMAN: அக்ரிகல்ச்சர் டிமாண்டின் போது இது பற்றி விரிவாக விவாதம் நடந்து அதற்கு விவசாய அமைச்சர் அவர்கள்கூட பதில் சொல்லியிருக்கிறார்.

SRI C. NATARAJAN: அமைச்சர் அவர்கள் 4,000 ஏக்கர் கரும்பு சாகுபடி இருந்தால் அந்த இடத்தில் சர்க்கரை ஆலை வைக்க முடியும் என்று சொன்னார். சர்க்கரை ஆலையை ஏற்படுத்துவதற்கு வேண்டிய இடம் எவ்வளவு என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN: 100 ஏக்கர் இருந்தால் போதும்.

[15th March 1961

SRI S. M. ANNAMALAI : ஸார், திருவண்ணாமலையில் சர்க்கரை ஆலை ஏற்படுத்துவதைப் பற்றிச் சொன்னார்கள். திருவண்ணாமலையில் சர்க்கரை ஆலை ஏற்படுத்தவேண்டுமென்று அங்குள்ள மக்கள் சொன்னார்கள். சர்க்காரும் ஷேர் சேருங்கள் என்று சொன்னார்கள். அதன் பிரகாரம் ஷேர் சேர்த்தார்கள். அப்படி இருந்தும் ஏன் இது கைவிடப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதெல்லாம் கைவிடப்படவில்லை. ஒவ்வொரு சமயத்திலும் அகில இந்திய ரீதியில் சர்க்கரை ஆலைகள் கொடுக்கப்படுகிறது. நமது தேவையை உத்தேசித்து நமக்கு எத்தனை கிடைக்கும் என்று பார்க்கிறோம். சிபாரிசு செய்கிறபோது ப்ரையாரிட்டி பிரகாரம் செய்கிறோம். இந்த ப்ரையாரிட்டி பின்னைத்தான் வரும்.

SRI A. VEDARATHNAM : நம் மாநிலத்தில் இதற்கு முன் லைஸென்ஸ் வழங்கப்பட்ட எத்தனை ஆலைகள் வேலை துவங்காமல் இருக்கின்றன ? லைஸென்ஸ் பெற்றும் துவங்காமல் இருக்கக் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : நான் இப்போது சொன்ன 8 ஆலைகளுக்கும் லைஸென்ஸ் வழங்கப்பட்டிருக்கிறது, ஆனால் இன்னும் வேலை துவங்கவில்லை.

SRI S. NAGARAJA MONIGAR : நமது ராஜ்யத்தில் சர்க்கரை ஆலை ஏற்கெனவே ஏற்பட்டது போக இப்போது ஏற்படுத்த பல பேர்கள் முன் வருகிறார்கள். லாபம் அதிகமாக இருக்கிறது என்று ஆரம்பிக்க முன் வருகிறார்களா ? அல்லது தேசபக்தி காரணமாகவா ? லாபம் அதிகமாக வருகிறது என்றால் சர்க்கரையின் விலையைக் குறைக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது நெல் உற்பத்தி செய்வதைவிட கரும்பு உற்பத்தி செய்தால் அதிகப்படி லாபம் கிடைக்கிறது. அதன் காரணமாக நிறைய உற்பத்தியை செய்ய முன் வருகிறார்கள்.

SRIMATHI KAMALAMBUJA AMMAL : கோவாப்பரேட்டிவ் சொஸைட்டி மூலமாக ஆரம்பிக்கப்படும் ஆலைகளுக்கு உதவி யந்திரங்களாகக் கொடுக்கப்படுகிறதா ? அல்லது ரொக்கமாகக் கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நாம் ரொக்கமாகத்தான் கொடுக்கிறோம்—யந்திரங்கள் வாங்குவதற்காகத்தான் கொடுக்கிறோம். அதை வாங்கி வேறு எதற்கும் உபயோகப்படுத்தி விட மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

*Sugar factory workers*

* 852 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the minimum wage, if any, fixed by the Central Wage Board for the workers in sugar factory; and